चिदेकत्वव्यवस्थितेः । चिदेकत्वपरिज्ञाने न शोचति न मुह्यति । अद्वैतं-परमानंदं शिवं याति तु केवलं । अधिष्ठानं समस्तस्य जगतस्सत्य-चिद्घनं । अहमस्मीति निश्चित्य वीतशोको भवेन्मुनिः । स्वशरीरे स्वयं ज्योतिस्वरूपं सर्वसाक्षिणं । क्षीणदोषाः प्रपश्यन्ति नेतरे माययावृताः ॥

அவ்விருவரில் ஜீவன் கர்மத்தின் பயனைப் புசிக்கின்றான்; மகேசுவரன் புசிக்கிறதில்லை. கேவலம் சாக்ஷிரூபமாகப் போகமின்றி மகேசுவரன் தானே பிரகாசிக்கின்றான். அவ்விருவருக்கும் பேதம் மாயையினாற் கற்பிக்கப்பட்டது. எப்படி ஆகாயபேதமாகக் கடாகாய மடாகாயங்கள் கற்பிக்கப்பட்டனவோ அதுபோல ஜீவசிவவடிவமாகப் பரமர்களும் கற்பிக்கப்பட்டனர். உண்மையாகவே சிவன் சாக்ஷாத் சித்தாம். ஜீவனும் இயல்பாக எப்போதும் சித்தாம். சித்தானது சித்துவடிவத்தினும் அபின்னமாம். சித்துத்தன்மைக்குக் கேடுவருதலின் பின்னமன்று. சித்துவடிவமாயிருத்தலால் சித்தினும் சித்து பேதப்படுகிறதில்லை; பேதப்படுகின்றதெனின் பேதம் ஜடமாம். எப்போதும் நிச்சயமாகச் சித்து ஒன்றாம்; தர்க்கத்தினாலும் பிரமாணத்தினாலும் சித்தின் ஒருமை வகுக்கப்பட்டிருத்தலால், சித்தின் ஒருமையுணர்ச்சியில் சோகிக்கிறது மில்லை; மோகிக்கிறதுமில்லை; அத்வைதபரானந்தமான கேவலசிவத்தை யடைகின்றான். சகல ஜகத்திற்கும் அதிஷ்டானமான சத்தியசிற்கனத்தினை யானென்று நிச்சயித்து முனி சோகநீங்கியவனாகின்றான், தனது சரீரத்தில் சுவயம்ஜோதிசொரூபமான சர்வசாக்ஷியினை க்ஷீணதோஷமுடையார் காண்கின்றனர். பிறர் (தோஷநீங்காதவர்) மாயையினால் மறைக்கப்பட்டவர்களாய்க் காண்பதில்லை.” என்பது நந்திகே

ஹிருதயோபநிஷத்தமும், அந்நபூர்ணேபநிஷத்தமுமாம். " नित्यस्सर्वगतो ह्यात्मा कूटस्थो दोषवर्जितः । एकस्सन्भिद्यते भ्रांत्या मायया न स्वरूपतः । तस्माददैतमेवास्ति न प्रपंचो न संसृतिः । यथाकाशो घटाकाशो मठाकाश इतीरितः । तथा भ्रांतैर्द्विधा प्रोक्तो ह्यात्मा जीवेश्वरात्मना । नाहं देहो न च प्राणो नेंद्रियाणि मनो नहि सदा सांक्षिरूपत्वाच्छिव एवास्मि केवलः । इति धीर्या मुनिश्रेष्ठ सा समाधिरिहोच्यते ॥ நித்தியமாய் எல்லாவற்றினிருப்பதாய்க் கூடஸ்தனய்த் தோஷமின்றியதாயுள்ள ஆத்மா ஒன்று யிருந்துகொண்டு, மாயாப் பிராந்தியினல் பேதப்படுகின்றது; சொரூபமாகப் பேதப்படுகிற தில்லை. அதனல் அத்வைதமே யிருக்கிறது; பிரபஞ்சமு மில்லை; சம்சாரமு மில்லை. எப்படி ஆகாயம் கடாகாசம் மடாகாசம் என்று சொல்லப்படுகின்றதோ, அப்படியே பிராந்தர்களால் ஆத்மா ஜீவேசுவரவடிவமாய் இருவகையாகச் சொல்லப்படுகின்றது. யான் தேக மல்லன்; பிராணனு மல்லன்; இந்திரியங்களு மல்லன்; மனமு மல்லன்; எப்போதும் சாக்ஷிவடிவமா யிருத்தலால் கேவலம் சிவமாகவே யிருக்கின்றேன் என்னும் புத்தி எதுவோ அது முனிசிரேஷ்டரே! இங்கு சமாதி யென்று சொல்லப்படுகின்றது." என்பது தர்சனேபநிஷத்தம் கூ-வது கண்டம். " सर्वसाक्षिणमात्मानं वर्णाश्रमविवर्जितं । ब्रह्मरूपतया पश्यन् ब्रह्मैव भवति स्वयम् । भासमानमिदं सर्वं भानरूपं परं पदं पश्यन्वेदांतमानेन सद्य एव विमुच्यते ॥ வர்ணசிரமங்களின்றியதும் சர்வசாக்ஷியுமாகிய ஆத்மாவைப் பிரஹ்மவடிவமாகப்

பார்த்துச் சுவயம் பிரஹ்மமே யாகின்றான். அறியப்படுகின்ற இவ்வெல்லாம் அறிவுவடிவமான பரமபதமாம். வேதாந்தப்பிரமாணத்தால் இதனை யறிந்து உடனே விடுபடுகின்றான்." என்பதும்,

"सत्यज्ञानानन्दपूर्णलक्षणं तमसः परं । ब्रह्मानंदं सदा पश्यन् कथं बध्येत कर्मणा । त्रिधामसाक्षिणं सत्यज्ञानानंदादिलक्षणं त्वमहंशब्द-लक्ष्यार्थमसक्तं सर्वदोषतः । सर्वगं सच्चिदात्मानं ज्ञानचक्षुर्निरीक्ष्यते । अज्ञानचक्षुर्नेक्ष्येत भास्वंतं भानुमंधवत् । प्रज्ञानमेव तद्ब्रह्म सत्यप्र-ज्ञानलक्षणं । एवं ब्रह्मपरिज्ञानादेव मर्त्योऽमृतो भवेत् । तद्ब्रह्मानंद-मद्वंद्वं निर्गुणं सत्यचिद्घनं । विदित्वा स्वात्मनो रूपं न बिभेति कुतश्चन ॥

சத்தியஞானாநந்தபூரணலக்ஷணமுள்ளதும், தமசாகிய அஞ்ஞானத்திற்கு மேலானதுமான பிரஹ்மாநந்தத்தை எப்போதும் கண்டு எப்படிக் கர்மத்தினால் கட்டுப்படுவன்? மூன்றவஸ்தைக்கும் சாக்ஷியும், சத்தியஞானாநந்தாதிலக்ஷணமும், துவம் (நீ) அகம் (யான்) என்னும் பதங்களின் லக்ஷியார்த்தமும், எத்தோஷங்களானும் பற்றப்படாததுமான சச்சிதாநந்தம் இவ்வெல்லாம் என்று ஞானநேத்திரமுடையவன் காண்கின்றான்; அஞ்ஞானநேத்திரமுடையவன் பிரகாசிக்கின்ற சூரியனைக் குருடன் காணாததுபோற் காணான். அந்தச்சத்தியப்பிரஞ்ஞானலக்ஷணமுள்ள பிரஹ்மம் பிரஞ்ஞானமே. இவ்வாறு பிரஹ்மத்தை அறிதலினாலேயே மர்த்தியன் அதாவது மரணதர்மமுள்ள நரன் அமிருதனாகின்றான். அந்தப்பிரஹ்மாநந்தமும், துவந்துவமின்றியதும், நிர்க்குணமுமான சத்தியசித்கனத்தினைத் தனது

ஆத்மவடிமாக அறிந்து எதனினின்றும் பயப்படுகிறதில்லை. யாவும் சின்மாத்திரமும், நித்தியமும், சம்பூர்ணமும், சுகமும், அவ்வியயமு மான சாக்ஷாத் பிரஹ்மமேயாம்; அந்நிய மில்லையென்பது பிரஹ்ம வித்துக்களின் நிலை." என்பதும், "इदं सत्यमिदं सत्यं सत्यमेतदिहोच्यते । अहं सत्यं परं ब्रह्म मत्तः किंचिन्न विद्यते ॥" "अहं ब्रह्मेति नियतं मोक्षहेतुर्महात्मनाम् ॥" "घटाकाशमठाकाशौ महाकाशे प्रतिष्ठितौ । एवं मयि चिदाकाशे जीवेशौ परिकल्पितौ । या च प्रागात्मनो मेया तथांते च तिरस्कृता । ब्रह्मवादिभिरुद्गीता सा मायेति विवेकतः । मायातत्कार्यविलये नेश्वरत्वं न जीवता । ततश्शुद्धचिदेवाहं व्योमवन्निरूपाधिकः ॥" "இது சத்தியம். இது சத்தியம்; சத்தியம். இது இங்கு சொல்லப்படுகின்றது :— யான் சத்தியமான பரப்பிரஹ்மம், என்னைவிட வேறு சிறிது மில்லை." "யான் பிரஹ்ம மென்பது மகாத்மாக்களுக்கு நியதமாய் மோக்ஷஹேதுவாம்." "கடாகாசமடாகாசங்கள் மகாகாசத்தில் நிலைத்திருக்கின்றன. இவ்வாறு சிதாகாசமாகிய என்னிடத்து ஜீவேசர் கற்பிக்கப்பட்டிருக்கின்றனர். எது தனக்குமுன் அளக்கப்படுவதாயும் அவ்வாறே முடிவில் விலக் கப்படுவதாயு மிருக்கின்றதோ அது மாயை யென்று பிரஹ்மவாதிக ளால் விவேகத்தினால் சொல்லப்படுகின்றது. மாயையும் அதன் காரி யமும் ஒடுங்கியபோது ஈசுவரத்துவமு மில்லை; ஜீவத்துவமு மில்லை. அதனால் ஆகாயம்போல் உபாதியின்றிய சுத்தசித்தே யான்." என் னும் இவைமுதலியனவும் வராகோபநிஷதம். "मयि जीवत्वमी-

शत्वं कल्पितं वस्तुतो नहि । इति यस्तु विजानाति स मुक्तो नात्र संशयः ॥ 'என்னிடத்து ஜீவத்துவமும் ஈசத்துவமும் கற்பிதம்; உண்மையாக இல்லை.' என்று எவன் அறிகின்றானோ அவன் முக்தன்; இதிற் சம்சயமில்லை.'' என்பது சரஸ்வதிரஹஸ்யோபநிஷதம்.

இவ்விஷயத்தில் பிரஹ்மவித்தியோபநிஷதம், தேஜோபிந்தூபநிஷதம், குண்டிகோபநிஷதமுதலிய வுபநிஷதங்களில் பெரும்பாகமும், சாந்தோக்கியம் ஆறாவது பிரபாடகம் பிருகதாரணியகம் ௩-வது அத்தியாயம் ௪-வது பிராஹ்மணம், ஐதரேயம், முண்டக நாராயணம், அதிமுதலியனவும் பிரமாணமாதல் காண்க. அவை விஸ்தாரமாயும் கீதை பஞ்சதசிமுதலியவற்றால் பிரசித்தமாயுமிருத்தலின் இங்கு எழுதப்படவில்லை.

ஸ்ரீ விசாரசந்திரோதயம் பதினோராங்கலை

தத்துவம்பதார்த்தைக்கியநிரூபணம் என்பது

முடிந்தது.

# ஸ்ரீவிசாரசந்திரோதயம்.

## பன்னிரண்டாங்கலை.

### ஞானியின் கர்மநிவிருத்திவர்ணநம்.

ஆன்ம வடிவ மறியிற் செவ்விதின்
மூவகைக் கன்ம முற்று மொழியும். (க)

* அஞ்ஞான வரண மடுத்த சஞ்சித
மியாவு ஞானத் தீயிற் றீயுஞ்
ஜடசே தனப்பின்ன னன்கே தொலையுந்
திடரா கத்துவேஷ கஷாயங் கரையும். (உ)

தாமரை யிலையைத் தண்ணீர் போல
ஆகாமி கர்ம மணுகா தென்க. (ங)

இவ்வுடற் கேதுவாம் பிராரத்த கன்ம
மின்பத் துன்பமாப் புசித்துத் தொலையும். (ச)

இவ்வகை யானே யொடுங்கும் பிறப்பு
விமலமாந் தன்னுரு விளங்கப் பெறினே. (ரு)

உகரு. வினா:—கர்ம மென்பது யாது?

விடை:— மனோவாக்குக்காயங்களின் கிரியை (செய்கை) கர்மமாம்.

உகசு. வினா:—கர்மம் எத்தனை வகையாம்?

---

*அஞ்ஞானத்தின் ஆவரணசக்தியை ஆசிரயித்திருக்கும் சஞ்சித கர்மம்.

விடை :—க. சஞ்சிதம், உ. பிராரத்தம், ங. ஆகாமியம் என்னும் பேதத்தால் கருமம் மூன்றுவகையாம்.

உகஎ. வினா :—க. சஞ்சிதகர்ம மென்பது யாது?

விடை :—க. அநேக அதீத (பூத) ஜன்மங்களிற் சஞ்சயஞ்செய்ய(சேர்க்க)ப்பட்ட கர்மம் சஞ்சிதமாம்.

உகஅ. வினா :—உ. பிராரத்தகர்ம மென்பது யாது?

விடை :— அநேக சஞ்சிதகர்மங்களின் மத்தியில் பரிபக்குவமாகியதும், ஈசுவர இச்சையினால் இந்த வர்த்தமான தேகத்தின் ஆரம்பத்திற்கு ஏதுவாகியதுமான ஏதேனும் ஓர்சஞ்சிதகர்மம் பிராரத்தமாம்.

உகசு. வினா :—ங. ஆகாமியகர்ம மென்பது யாது?

விடை :—ங. ஞானத்திற்கு முன்னாவது பின்னாவது இந்த வர்த்தமான தேகத்தில் மரணபரியந்தம் செய்யப்பட்ட கர்மம் ஆகாமியமாம்.

உஉ0. வினா :—க. ஞானிகளின் கர்மம் எப்படி நிவர்த்தியாகும்?

விடை :—க. * க. ஞானத்தினால் அஞ்ஞானத்தின் ஆவரண அம்சம் நிவர்த்தியாகின்றது. ஆவரணம் நிவர்த்

---

* க. "अहं ब्रह्मेति विज्ञानात्कल्पकोटिशतार्जितं । संचितं विलयं याति प्रबोधात्स्वप्नकर्मवत् ॥ யான் பிரஹ்மம் என்னும் விஞ்ஞா

தியாகவே, ஆவரணத்தை ஆசிரயித்துள்ள சஞ்சித(முன் அநேகஜன்மங்களிற் செய்த)கர்மம் நிவர்த்தியா (நாசமா) கின்றது.

௨. * ௨. "நான் அகர்த்தாவும் அபோக்தாவும் அசங்கமுமாகிய பிரஹ்மமா யிருக்கிறேன்." என்னும் நிச்சயபலத்தால், தனது ஆசிரயமாகிய பிரமஜதாதாத்மியம் நாசமாதலாலும், இராகத்துவேஷ மில்லாமையாலும், ஜலத்திலுள்ள தாமரையிலையைப்போல ஞானியை இந்த ஜன்மத்தில் முன்னும் பின்னும் செய்யப்பட்ட ஆகாமியகர்மங்கள் நெருங்கா. ஆனல் ஞானியின் ஆகாமிய (இந்த ஜன்மத்தில் செய்யப்பட்ட) சுபாசுபகர்மங்களைக் கிரமமாகச் சகாடிகளாகிய பக்தர்களும் துவேஷிகளாகிய நிந்தகர்களும் கிரகிக்கின்றார்கள்.

---

னத்தினுல் நூறுகோடி ஜன்மங்களிற் சம்பாதிக்கப்பட்ட சஞ்சிதம் விழிப்பினுல் சொப்பனகர்மம் நாசமாவதுபோல நாசமாகின்றது." என்பது அத்தியாத்மோபநிஷதம்.

* ௨. स्वमसंगमुदासीनं परिज्ञाय नभो यथा । न श्लिष्यते यतिः किंचित्कदाचिद्भाविकर्मभिः ॥ न नभो घटयोगेन सुरागंधेन लिप्यते । तथात्मोपाधियोगेन तद्धर्मैर्नैव लिप्यते ॥ தன்னை ஆகாயம்போல அசங்கமாகவும் உதாசீனமாகவும் அறிந்த யதியானவன் ஆகாமிகர்மங்களால் எப்போதும் சிறிதும் பற்றப்படுகிறதில்லை. எப்படி ஆகாயம் குடச்சேர்க்கையினுல் குடத்திருக்கும் கள்ளின் வாசனையால் பற்றப்படுகி

ந. அஞ்ஞானத்தின் விக்ஷேபசக்தியை ஆசிரயித்திருக்கும் ஞானியின் * ந. பிராரப்த (முன் ஏதேனுமோர் ஜன்மத்தில் செய்யப்பட்டு, இந்த ஜன்மத்தினாரம்பத்திற் கேதுவாயுள்ள) கர்மம் போகத்தால் நிவர்த்தியாகிறது.

---

றதில்லையோ, அதுபோல ஆத்மா உபாதிசம்பந்தத்தினால்' அதன் தர்மங்களால் பற்றப்படுகிறதில்லை." என்பது ஆத்மபோதோபநிஷதம். यस्य नेच्छा तथानिच्छा ज्ञस्य कर्मणि तिष्ठतः । न तस्य लिप्यते प्रज्ञा पद्मपत्रमिवांबुभिः ॥ கர்மத்தில் நிற்கின்ற எந்த ஞானிக்கு இச்சை யில்லையோ, அதுபோலவே அநிச்சையு மில்லையோ, அவனுடைய பிரஞ்ஞை தாமரையிலையில் நீர்போலக் கர்மங்களால் பற்றப்படுகிறதில்லை." என்பது மஹோபநிஷதம் ௫-வது அத்தியாயம்.

* ந. ज्ञानोदयात्पुरारब्धं कर्म ज्ञानान्न नश्यति । अदत्वा स्वफलं लक्ष्यमुद्दिश्योत्सृष्टबाणवत् । व्याघ्रबुध्या विनिर्मुक्तो बाणः पश्चात्तु गोमतौ । न तिष्ठति भिनत्त्येव लक्ष्यं वेगेन निर्भरं । अजरोस्म्यमरोस्मीति य आत्मानं प्रपद्यते । तदात्मना तिष्ठतोस्य कुतः प्रारब्धकल्पना । प्रारब्धं सिध्यति तदा यदा देहात्मना स्थितिः । देहात्मभावे नैवेष्टः प्रारब्धं त्यज्यतामतः । प्रारब्धकल्पनाप्यस्य देहस्य भ्रांतिरेवहि । अध्यस्तस्य कुतस्सत्त्वमसत्त्वस्य कुतो जनिः । अजातस्य कुतो नाशः प्रारब्धमसतः कुतः ज्ञानेनाज्ञानकार्यस्य समूलस्य लयो यदि । तिष्ठत्ययं कथं देह इति शंकावतो जडान् । समाधातुं बाह्यदृष्ट्या

அதனால் ஞானி, சகலகர்மங்களினின்றும் முக்தனாகின்றான். இதனாலேயே கர்மத்தாலாகிய ஜன்மமுதலிய சமுசாரத்தினின்றும் முக்தனாகின்றான். இவ்வாறு ஞானிக்கு கர்மநிவிருத்தி யுண்டாகின்றது.

ஸ்ரீ விசாரசந்திரோதயம் பன்னிரண்டாங்கலை
ஞானியின் கர்மநிவிருத்திவர்ணனம் என்பது
முடிந்தது.

---

प्रारब्धं वदति श्रुतिः । न तु देहादिसत्यत्वबोधनाय विपश्चिताम् ॥

ஞானோதயத்திற்கு முன் ஆரம்பிக்கப்பட்ட கர்மம் இலக்ஷியத்தை யுத்தேசித்து (குறியை நோக்கி) விடப்பட்ட பாணம்போல் தனது பயனைத் தராமல் ஞானத்தினால் நசியாது. புலியென்னும் புத்தியினால் விடப்பட்ட பாணமானது பின் பசுவென்று மதிக்கப்பட்டகாலத்து நிற்பதில்லை. தாங்காத இலக்ஷியத்தை (பசுவை) வேகமாய்ச் சென்று பேதிக்கவே செய்கின்றது. யான் அஜரன் அமரன் என்று எவன் ஆத்மாவை யறிகின்றானோ, அத்தன்மைய வாத்மாவாக நிலைத்துள்ள இவனுக்குப் பிராரப்த கற்பனை யேது? எப்போது தேகாத்மாவாக நிலையிருக்கின்றதோ அப்போது பிராரப்தம் சித்திக்கின்றது. தேகாத்மத்தன்மை விரும்பப்பட்டதே யன்று. அதனால் பிராரப்தம் விடத்தக்கதாம். ஆதலால் பிராரப்தகற்பனையும் இத்தேகத்தின் பிராந்தியே யாம். அத்தியஸ்தத்திற்குச் சத்துவ மேது? சத்துவமின்றியதற்குப் பிறப்பேது? பிறவாததற்கு நாச மேது? அசத்திற்குப் பிராரப்த மேது? ஞானத்தினால் அஞ்ஞானகாரியம் மூலத்தோடு நாசமாகுங்கால் இந்தத்தேகம் எப்படி யிருக்கு மென்னும் சங்கையுடைய ஜடர்களைச் சமாதானஞ்செய்ய வெளிப்பார்வையில் சுருதி பிராரப்தத்தினைக் கூறுகின்றது. அறிஞருக்குத் தேகாதிசத்தியத்தன்மையைப் போதிக்கும் பொருட்டன்று." என்பது அத்தியாத்மோபநிஷத்தம்.

# ஸ்ரீவிசாரசந்திரோதயம்.

---

## பதின்மூன்றுங்கலை.

### ஞானசப்தபூமியின் வர்ணநம்.

ஞான பூமி யோரே ழென்றே
நவின்றனர் வசிட்ட முனிவ ரவற்றுட்
சுபசா தனசம் பத்தியே முதலா
மிரண்டா வதுவே சிரவணு திவிசார
நிதித்தியா சனமென் பதுவே மூன்று
மான்மா பரோக்ஷ நான்கா மகந்தை
மமதை யென்பன வொழித லைந்தா
மாறு வதாகு மனைத்துந் தோற்றமை
யெவற்றினு முயர்ந்த துரியமே யாவதே
யெல்லா விருத்தியு மொடுங்கி யிதனிற்
காட சுழுத்தியிற் காணு தொன்றையு
மின்பே வடிவா யிருக்குஞ் சிதான்மா. (க)

உஉக. வினு :—எல்லாஞானிகளுக்கும் நிச்சய மொன்று யிருக்க, ஸ்திதி (நிலை) வேறு யிருப்ப தென் ?

விடை :— சகல ஞானிகளது ஸ்திதியின் பேதமும் ஞானபூமியின் பேதத்தா லாகின்றது.

உஉஉ. *வினு:—அந்த ஞானபூமி எத்தனை வகையாம்?

விடை:—க. சுபேச்சை, உ. சுவிசாரணை, ௩. தநுமானசி, ௪. சத்துவாபத்தி, ரு. அசம்சத்தி, ௬. பதார்த்தாபாவினி, ௭. துரியம் என்னும் இவ்வேழும் *க. ஞானபூமியாம்.

உஉ௩. வினு:—க. சுபேச்சை என்பது யாது?

விடை:—க. பூர்வஜன்மத்திலாவது இந்த ஜன்மத்திலாவது செய்யப்பட்ட நிஷ்காமகர்மவுபாசனைகளால் சுத்தியும் ஏகாக்கிரமுமுள்ள சித்தமுடைய புருஷர்களுக்கு விவேகம் வைராக்கியம் ஷட்சம்பத்தி முமுக்ஷுத்துவம் என்னும் நான்கு சாதனங்களுமுண்டாய், ஆத்மாவை அறி

---

* க. "ज्ञानभूमिस्सुभेच्छाख्या प्रथमा समुदाहृता । विचारणा द्वितीया तु तृतीया तनुमानसी । सत्त्वापत्तिश्चतुर्थी स्यात्ततो संसक्तिनामिका । पदार्थाभावना षष्ठी सप्तमी तुर्यगा स्मृता ॥ ஞானபூமி:- சுபேச்சை யென்பது முதலாவது எனப்படும். விசாரணை இரண்டாவது. தநுமானஸீ மூன்றாவது. சத்வாபத்தி நான்காவது. சம்சத்தி யென்பது ஐந்தாவது. பதார்த்தாபாவினீ ஆறாவது. துரியகா ஏழாவது." என்று மகோபநிஷத்தம் ரு-வது அத்தியாயத்திலும், வராகோபநிஷத்தம் ௪-வது அத்தியாயத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. மற்றும் இச்சப்தபூமி அன்னபூர்ணோபநிஷத்தம், அக்ஷியுபநிஷத முதலியவற்றிலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

யவேண்டுமென் றுண்டாகும் தீவிர இச்சை * உ. சுபேச்சை என்னும் ஞானத்தின் முதற்பூமியாம்.

உ௨௪. வினா:—சுவிசாரணை என்பது யாது?

விடை:—உ. ஆத்மாவை அறியவேண்டு மென்னும் தீவிர இச்சையால் பிரஹ்மநிஷ்டராகிய குருவை விதிபூர்வக மாகச் சரணமடைந்து, அவர்முகமாக ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியத்தை யறிவிக்கும் வேதாந்தவாக்கியத்தைச் சிரவணம் செய்து, அந்த அர்த்தம் தன் மனதிற் பதியும்பொருட்டு, அநேகயுக்திகளால் மனன(விசார)ம் செய்தல், *ந. சுவிசாரணை என்னும் ஞானத்தின் இரண்டாம் பூமியாம்.

---

* உ. "किं मुढ एवास्मि प्रेक्षेहं शास्त्रसज्जनैः । वैराग्यपूर्वमिच्छेति शुभे(स्वे)च्छेत्युच्यते बुधैः॥ யான் மூடனாகவே யிருக்கிறேனே! சாஸ்திரஸஜ்ஜனர்களால் காண்பேனாக என்று வைராக்கியபூர்வமா யுண்டாகும் இச்சை அறிஞர்களால் சுபேச்சை (சுகேச்சையென்று)' சொல்லப்படுகின்றது." என்பது வராகோபநிஷதம் ச-வது அத்தியாயமும், மகோபநிஷதம் ரு-வது அத்தியாயமுமாம். "शास्त्रसज्जनसंपर्कवैराग्यरसरूपिणी । प्रथमभूमिकैषोक्ता मुमुक्षुत्वप्रदायिनी ॥ சாஸ்திரஸஜ்ஜனச்சேர்க்கை வைராக்கிய மென்பவற்றில் இரஸவடிவினது முதல் பூமிகை. இது முமுக்ஷுத்துவத்தைத் தருவதென்று சொல்லப்படுகின்றது." என்பது அந்நபூர்ணோபநிஷதம்.

* ந. இவ்வாறே இந்நூலிற் கூறியபடியே இவ்விரண்டாவது

உஉ௫. வினா :—தநுமானசி யென்பது யாது?

விடை :— ௩. சொரூபசாக்ஷாத்கார(அபரோக்ஷாநுபவ)த்தின் பொருட்டுச், சிரவணமனனவாயிலாக நிச்சயிக்கப்பட்ட பிரஹ்மாத்மவைக்கியமாகிய அர்த்தத்தை இடைவிடாமல் சிந்தித்தலாகிய நிதித்தியாசனத்தால் ஸ்தூல(பகிர்முகமாகிய) மனதிற்குச் சூக்ஷ்மத்தன்மை (அந்தர்முகத்துவம்) உண்டாதல் தநுமானசி என்னும் ஞானத்தின் மூன்றாம் பூமியாம்.

உஉ௬. வினா :—சத்துவாபத்தி யென்பது யாது?

விடை :— ௪. சிரவணமனனநிதித்தியாசனங்களால் சமுசயவிபரீதங்களில்லாத சொரூபசாக்ஷாத்காரமாகிய நிருவிகற்பஸ்திதி யுண்டாவதனால் தத்துவஞானத்தோடு கூடிய மனவடிவசத்துவ(சுத்தாந்தக்கரண)த்தின் எந்த ஆபத்தி(அடைவு) உண்டாகின்றதோ, அது சத்துவாபத்தி என்னும் ஞானத்தின் நான்காம் பூமியாம்.

உஉ௭. வினா :—அசம்சத்தி என்பது யாது?

விடை :—௫. நிருவிகற்பசமாதியினது அப்பியாசத்தின் பரிபக்குவத்தால் தேகத்தில் எல்லாவிதத்தாலும் அகர்த்தமமதைகள் கரைந்து தேகமுதலியவற்றில் எவ்

---

முதலிய மற்றப்பூமிகளின் இலக்ஷணங்களும் மேற்கண்ட உபநிஷதங்களிற்றானே கூறப்பட்டிருத்தல் காண்க.

விதத்தாலும் ஆசத்தி (பிரியம்) உண்டாகா திருத்தல், அசம் சத்தி என்னும் ஞானத்தின் ஐந்தாம் பூமியாம்.

உஉஅ. வினா:—பதார்த்தாபாவினி என்பது யாது?

விடை.—சா. நிருவிகற்பசமாதியின் மிகுந்த அப்பி யாசத்தால் தேகமுதலிய சகலபதார்த்தங்களுக்கும் அதிஷ் டானப்பிரஹ்மரூபமாகத் தோற்றுதலால் எந்த அபா வம் (அப்பிரதீதி) உண்டாகின்றதோ, அது பதார்த்தாபாவினி என்னும் ஞானத்தின் ஆறுவது பூமியாம்.

உஉகூ. வினா:—துரிய மென்பது யாது?

விடை:— எ. ஞாதிருஞானஞேயமாகிய திரிபுடி நான்காம் ஐந்தாம் பூமிகளைப்போலப் பாவரூபமாகவும், ஆறும் பூமியைப்போல அபாவரூபமாகவும் எங்கே தோற்ற வில்லையோ, அப்படிப்பட்ட தன்னாலும் பிறராலும் எழுத லில்லாத துரியபதத்திலுள்ள மனதின் நிலை * ச. துரிய மென்னும் ஞானத்தின் ஏழாவது பூமியாம்.

---

* ச. "एषा जीवन्मुक्तेषु तुर्यावस्तेति विद्यते । विदेहमुक्ति-विषयं तुर्यातीतमतः परं ॥ இது (ஏழாவது பூமி) ஜீவன்முக்தரிடத் துத் துரியாவஸ்தை யென்று இருக்கின்றது. இதன் பின் விதேக முக்திவிஷயமாம் துரியாதீதம்." என்பது மகோபநிஷதம் ந-வது அத்தியாயம்.

உ௲0. வினா:—இந்த ஏழுபூமிகளும் எதற்குச் சாதனம்?

விடை:—க-வது, உ-வது, ௩-வது *௫ பூமிகள் தத்துவஞானத்திற்குச் சாதனமாம்.

*ச. நான்காவது பூமி தத்துவஞானவடிவமா யிருத்தலால் ஜீவன்முக்திவிதேகமுக்திகளுக்குச் சாதனமாம்.

---

* ௫. "सप्तभूमिषु जीवन्मुक्ताश्चत्वारः ॥ஏழுபூமிகளில் ஜீவன்முக்தர் நால்வர்" "भूमित्रयेषु विहरन्मुमुक्षुर्भवति । तुरीयभूम्यां विहरन् ब्रह्मविद्भवति । पंचमभूम्यां विहरन् ब्रह्मविद्वरो भवति । षष्ठ-भूम्यां विहरन् ब्रह्मविद्वरीयान्भवति । सप्तमभूम्यां विहरन् ब्रह्मविद्वरिष्ठो भवति ॥ "மூன்றுபூமிகளிலும் சஞ்சரிப்பவன் முமுக்ஷுவாவன். நான்காவது பூமியில் சரிப்பவன் பிரஹ்மவித்தாவன். ஐந்தாவது பூமியில் சரிப்பவன் பிரஹ்மவித்துவரனாவன். ஆறாவது பூமியில் சரிப்பவன் பிரஹ்மவித்துவரியானாவன். ஏழாவது பூமியில் சரிப்பவன் பிரஹ்மவித்துவரிஷ்டனாவன்." என்பது வராகோபநிஷதம் ச-வது அத்தியாயம்.

*ச. (க) கிருதோபாசகன் (ஞானத்திற்கு முன் உபாசனையைப் பூரணமாகச் செய்தவன்.)

(உ) அகிருதோபாசகன் (ஞானத்திற்கு முன் உபாசனைசெய்யாதவன்) என்னும் பேதத்தால்

நான்காம்பூமியாகிய ஞானத்திற் கதிகாரிகளிரண்டுவகையாவர். அவர்களுள்,

ரு-வது, சு-வது, எ-வது பூமிகள் ஜீவன்முக்தியின் விலக்ஷ ணாநந்தத்திற்குச் சாதனமாம்.

ஸ்ரீ விசாரசந்திரோதயம் பதின்மூன்றுங்கலை
ஞானசப்தபூமியின் வர்ணநம் என்பது
முடிந்தது.

---

(க) கிருதோபாசனன் நல்லவைராக்கியாதி சாதனங்களோடு கூடியிருப்பவன். ஞானத்திற்குப் பிறகு சொற்ப அப்பியாசத்தால் சடுதியாக ஐந்தாவதுமுதலிய பூமிகளிலேறுகின்றான்.

(உ) அகிருதோபாசனனிடத்தில் எல்லாச்சாதனங்களும் வெளிப்படையாகத் தோற்றுகிறதில்லை. ஆனால் ஒன்றிரண்டு வெளிப் படையாகவும், மற்றவை மறைவாகவுமிருக்கும். ஆகையால் அவன் புத்தியுடையவனா யிருந்தால் நான்காம்பூமியாகிய தத்துவஞானத்தை அடைகின்றான். ஆனால் வெகுகால அப்பியாசத்தால் எப்போதாவது ஐந்தாவதுமுதலிய ஏதேனுமோர் பூமியில் ஆரூடனாகின்றான்; சீக்கிரத்தி லாகிறதில்லை.

# ஸ்ரீவிசாரசந்திரோதயம்.

---

## பதினுன்காங்கலை.

## ஜீவன்முக்திவிதேகமுக்திவர்ணநம்.

உண்மை வடிவ முணர்ந்தக் காலை
பிரம வடிவ பந்த நிவர்த்தியாஞ்
சீவன் முக்தி சமீபித் ததுவா
முடலுடன் பொருந்திய வொருவன் றனக்குநல்
லின்ப வடிவ தியையுமே வீட்டில். (க)

விடினிவ் வுடலை வித்துவா னன்றே
விதேக முத்தியை மேவுவ னவித்தியா
லேச மழியு மாபாஸ வுலகையும்
விடுவன் சாகர மடைந்த * சரித்தினிற்
சின்மாத் திரமது சேர்ந்து விசேஷ
மொழிந்த சித்தின் சொரூப மடைவ
னில்லை பிறப்ப தென்சுத லவற்கே. (உ)

உ௱௧. வினு:—ஜீவன்முக்தி என்பது யாது?

விடை:—தேகாதிப்பிரசஞ்சம் தோற்றிக்கொண்டிருக்

---

* சரித்து=ஆறு.

கப் பிரஹ்மசொரூபமாக நிலைத்தல் * க. ஜீவன்முக்தியாம்.

* க. ஜீவன்முக்திவிதேகமுக்திலக்ஷணம், ஜீவன்முக்தன்சொரூபம், அவனது ஆசாரம், ஜீவன்முக்தனிடத்துள்ள சித்தம் அகங்கார முதலியவற்றைக் கூறும் சுருதிகள் வருமாறு:—"पुरुषस्य कर्तृत्व-भोक्तृत्वसुखदुःखादिलक्षणश्चित्तधर्मः क्लेशरूपत्वाद्बंधो भवति। तन्निरोधनं जीवन्मुक्तिः। उपाधिविनिर्मुक्तघटाकाशवत्प्रारब्धक्षयाद्विदेहमुक्तिः। जीवन्मुक्तिविदेहमुक्त्योरष्टोत्तरशतोपनिषदः प्रमाणम्॥ புருஷனுக்குக் கர்த்திருத்வ போக்திருத்துவ சுகதுக்காதிலக்ஷண சித்ததர்மம் கிலேச வடிவமாயிருத்தலின் பந்தமாம். அதனை நிரோதித்தல் ஜீவன்முக்தியாம். உபாதி நீங்கிய கடாகாயம்போல் பிராரப்தக்ஷயத்தால் விதேக முக்தி யுண்டாகின்றது. ஜீவன்முக்திவிதேகமுக்திகளுக்கு நூற்றெட்டு உபநிஷதங்கள் பிரமாணமாம்." என்பதும், "प्रारब्धक्षयपर्यंतं जीवन्मुक्ता भवन्ति ते। ततः कालवशादेव प्रारब्धे तु क्षयंगते। वैदेहीं मामकीं मुक्तिं यान्ति नास्त्यत्र संशयः॥ பிராரப்தநாசபரியந்தம் அவர்கள் ஜீவன்முக்தர்களாய் இருக்கின்றனர். அதன்பின் காலவசத்தினாலேயே பிராரப்தம் நசித்தபோது எனது விதேகமுக்தியை அடைவர். இதிற் சம்சய மில்லை." என்பதும் முக்திகோபநிஷதம்.

"अहं ब्रह्मेति चेद्वेद साक्षात्कारस्स उच्यते। यस्मिन्काले स्वमात्मानं योगी जानाति केवलं। तस्मात्कालात्समारभ्य जीवन्मुक्तो भवत्यसौ॥ யான் பிரஹ்ம மென்று அறியின் அது சாக்ஷாத்கார

௨௫௨. வினா:—ஜீவன்முக்தியில் பிரபஞ்சம் தோற்றுதற்குக் காரணம் யாது?

---

ரெனப்படும். எந்தக்காலத்தில் கேவலம் தனது ஆத்மாவினை யோகி அறிகின்றானோ அந்தக்காலமுதற்கொண்டு இவன் ஜீவன்முக்தனாகின்றான்" என்பது வராகோபநிஷதம்.

"न बद्धोस्मि न मुक्तोस्मि ब्रह्मैवास्मि निरामयं । द्वैतभावविमुक्तोस्मि सच्चिदानंदलक्षणः । एवं भावय यत्नेन जीवन्मुक्तो भविष्यसि ॥ யான் பெத்தனல்லன், முக்தனல்லன், நிராமயமான பிரஹ்மமாயிருக்கின்றேன், துவைதபாவத்தினின்றும் விடுபட்டவனாய்ச் சச்சிதாநந்தலக்ஷணனாயிருக்கின்றேன் என்று இப்படி முயற்சியினால் பாவி. ஜீவன்முக்தனாவாய்." என்பது அந்நபூர்ணோபநிஷதம்.

देहत्रयातिरिक्तोहँ शुद्धचैतन्यमस्म्यहं । ब्रह्माहमिति यस्यांतस्सजीवन्मुक्त उच्यते ॥ தேகமூன்றற்கும் விலக்ஷணன் யான், சுத்தசைதன்னியம் யான், பிரஹ்மம் யான் என்று எவன் உள்ளமிருக்கின்றதோ, அவன் ஜீவன்முக்தனெனப்படுகின்றான்." என்பதும், "इदं चैतन्यमेवेति अहं चैतन्यमित्यपि । इति निश्चयशून्यो यो वैदेहीमुक्त एव सः ॥" "यस्य प्रपंचभानं न ब्रह्माकारमपीह न ॥ स्वस्वरूपे स्वयंज्योतिःस्वस्वरूपे स्वयं रतिः।वाचामगोचरानंदो वाङ्मनोगोचरस्स्वयं । अतीतातीतभावो यो वैदेहीमुक्त एव सः ॥" "இது

விடை:—ஆவரணம் விக்ஷேபமென்னு மிரண்டும் அவித்தையின் சக்திகளாம். அவற்றுள்,

---

சைதன்னியமே என்பதும் நான் சைதன்னியம் என்பதுமான இத்தன்மைய நிச்சயமின்றியவன் எவனோ அவன் விதேகமுக்தனே." "எவனுக்குப் பிரபஞ்சத்தோற்ற மில்லையோ, பிரஹ்மாகாரமும் இங்கு இல்லையோ, சுவசொரூபமான சுயஞ்சோதிசொரூபத்தில் சுயம் ரதியுள்ளவனும் வாக்கிற்கெட்டாத ஆநந்தமுடையவனும், சுயம் வாக்கு மனதுக்கெட்டுபவனும், அதிதாதீதத்தன்மையுடையவனும் எவனோ அவன் விதேகமுக்தனே." என்பது முதலிய ௪-வது அத்தியாயம் முழுவதும் தேஜோபிந்தூபநிஷதம்.

"जीवन्मुक्ततया स्वस्थो लोके विहर विज्वरः । अंतस्संत्यक्तसर्वाशो वीतरागो विवासनः । बहिस्सर्वसमाचारो लोके विहर विज्वरः । बहिः कृत्रिमसंरंभो हृदि संरंभवर्जितः । कर्ता बहिरकर्तांतर्लोके विहर शुद्धधीः । त्यक्ताहंकृतिराश्वस्तमतिराकाशशोभनः । अगृहीतकळंकांको लोके विहर शुद्धधीः । उदारः पेशलाचारस्सर्वाचारानुवृत्तिमान्। अंतस्संगपरित्यागी बहिस्संसारवानिव । अंतर्वैराग्यमादाय बहिराशोन्मुखेहितः । अयं बंधुरयं नेति गणना लघुचेतसाम् । उदारचरितानां तु वसुधैव कुटुंबकम् ॥ ஜீவன்முக்தத்தன்மையினால் சுவஸ்தனாய், உலகத்தில் ஜ்வரம் நீங்கியவனாய்த் திரி. உள்ளே சகலபற்றும் விட்டவனாய் ராகமின்றியவனாய், வாசனை யொழிந்தவனாய், வெளியில் சகல நல்லொழுக்கமு முள்ளவனாய் ஜ்வரம்நீங்கியவனாய்த் திரி.

க ஆவரணசக்தி ஞானத்தால் நாசமாகின்றது. அத ஞல் ஞானிக்கு வேறு பிறப்பில்லை. ஆனல்,

---

வெளியில் கிருத்திருமமான செய்கையுள்ளவனுய், உள்ளத்தில் ஒரு செய்கையுமில்லாதவனுய், வெளியிற் கர்த்தாவாய், உள்ளே அகர்த்தா வாய், சுத்தபுத்தியுள்ளவனுய் உலகத்தில் திரி. அகங்காரத்தை விட்ட வனுய், ஸ்வஸ்தமதியுடையவனுய், ஆகாசத்தைப்போல் சோபிக்கின்றவ னுய், களங்கமான குறிகளைக் கொள்ளாதவனுய், சுத்தபுத்தியுடையவ னுய் உலகத்தில் திரி. உதாரனும் பேசலாசாரமுள்ள (மெத்தென்ற நடையுடைய)வனும் சகல ஆசாரங்களேயும் தழுவியவனுமாய் உள்ளிற் சங்கத்தை விட்டு வெளியில் சம்சாரியைப்போலும் உள்ளே வைராக் கியத்தைக்கொண்டு வெளியில் ஆசைப்படுபவன்போலும் இருப்பாய். இவன் பந்து இவன் பந்துவல்லன் என்று கணித்தல் அற்பசித்தமுள் ளவருக்காம். உதாரசித்தமுடையவருக்கு உலகமே குடும்பமாம்.'' என்பது ஜீவன்முக்தாசாரத்தைக் கூறும் மகோபநிஷதம்.

भ्रष्टबीजोपमा येषां पुनर्जननवर्जिता । वासनारसनाहीना जीवन्मुक्ता हि ते स्मृताः । सत्त्वरूपपरिप्राप्तचित्तास्ते ज्ञानपारगाः । अचित्ता इति कथ्यंते देहांते व्योमरूपिणः ॥ எவர்களுக்கு வறுத்தவித்தையி னைப்போல் மறுபடியும் ஜனித்தலின்றியதான வாசனை யிருக்கின்ற தோ அவர்கள் வாசனைக் கயிறின்றிய ஜீவன்முக்தர்க ளென்று கருதப் படுவர். ஞானத்தின் கரைகண்ட அவர்கள் சத்துவவடிவம் பெற்ற சித்தமுடையவர்களாம். தேகாந்தத்தில் ஆகாசவடிவினராகிய அவர்கள் சித்தமில்லாதவர்க ளென்று சொல்லப்படுகின்றனர்.'' என் பது அந்நபூர்ணேபநிஷதம்.

உ. விக்ஷேபசக்தி (அவித்தியாலேசம்) பிராரப்த பலத்தால் வறுத்த விதையைப்போல இருக்கின்றது.

அதனால் ஜீவன்முக்தியில் பிரபஞ்சத்தோற்ற முண்டாகின்றது.

உ௩௩. வினு:—ஜீவன்முக்தியில் பிரபஞ்சத்தோற்றம் எப்படி யுண்டாகின்றது?

விடை:— க. இரஜ்ஜுஞானத்தால் சர்ப்பப்பிராந்தி நீங்கிய பின்னும் நடுக்கமுதலியவை தோற்றுவதுபோலும்,

உ. கண்ணுடியை அறிந்தவனுக்குப் பிரதிபிம்பம் தோற்றுவதுபோலும்,

௩. மருஸ்தலத்தை யறிந்தவனுக்குக் கானல்ஜலம் தோற்றுவதுபோலும்,

தத்துவஞானிக்கு ஜீவன்முக்திதசையில் பாதிக்கப் பட்ட பிரபஞ்சத்தின் தோற்ற முண்டாகின்றது.

உ௩௪. வினு:—பாதிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் தோற்றத்தில் வேறு திருஷ்டாந்தம் யாது?

விடை:— திருஷ்டாந்தம்:— மகாபாரதயுத்தத்தில் துரோணுசாரியரது மரணத்திற்குப்பின் அசுவத்தாமாவோடு யுத்த முண்டாயிற்று. அன்றுதினம் சத்தியசங்கற்பராகிய ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா, "இன்று யுத்தம் முடிந்து

வீட்டுக்குத் திரும்பும் வரையிலும் இந்த இரதமும் குதிரைகளும் அப்படியே இருக்கக்கடவன.'' வென்று சங்கற்பித்துக்கொண்டு, யுத்தபூமியில் வந்தார். அங்கே அசுவத்தாமா பிரஹ்மாஸ்திரம் (அக்கினியஸ்திரம்) போட்டார். அதனால் அக்கணத்திலேயே அர்ஜுனனது இரதமும் குதிரைகளும் பஸ்மமாகியும், கிருஷ்ணபரமாத்மாவாகிய சாரதியின் சங்கற்பபலத்தால் அப்படியே யிருந்து, வீட்டிற்கு வந்தவுடனே சாம்பர்க்குவிய லாய்விட்டன.

சித்தாந்தம் :—

அதுபோல,

க. ஸ்தூலதேகம் இரதம்.

உ. அதற்குப் புண்ணியபாவங்க ளிரண்டு சக்கரங்கள்.

ங. முக்குணம் கோடி.

ச. பஞ்சப்பிராணன் கயிறு.

ரு. தசேந்திரியங்கள் குதிரைகள்.

சா. சுபாசுபமாகிய சப்தமுதலிய பஞ்சவிஷயங்கள் மார்க்கம்.

எ. மனம் கடிவாளம்.

அ. புத்தி சாரதி (கிருஷ்ணன்).

கூ. பிராரப்தகர்மம் அவரது சங்கற்பம்.

௧0. அகங்காரம் உட்காரு மிடம்.

௧௧. ஆத்மா இரதிக(அர்ஜுனன்)ன்.

௧௨. அவனது வைராக்கியாதி சாதனங்கள் பாணங்கள்.

அவன் இரதத்தில் ஆரூடனாய்ச் சற்சங்கமாகிய இரணபூமியிற் சென்றான். அவனைக் குருவாகிய அசுவத்தாமா, மகாவாக்கிய உபதேசமாகிய பிரஹ்மாஸ்திரத்தா லடித்தார். அதனால் ஞானமாகிய அக்கினி யுதயமாக, அந்தக்ஷணத்திலேயே தேகாதிப்பிரபஞ்சமாகிய இரதமுதலிய யாவும் பாத மாயின. என்றாலும் ஸ்ரீ கிருஷ்ணனாகிய சாரதிஸ்தானத்திலுள்ள புத்தியின் பிராரப்தகர்மமாகிய சங்கற்ப பலத்தால் தேகமுதலியவை * ௨. நாசமாகாமல் பிறகும் தோற்றிக்கொண்டிருக்கின்றன. இதனையே * ௩. பாதிதாநுவிருத்தி என்பர்.

---

* ௨. எதனது நாச முண்டாகின்றதோ அது நாசத்தின் பிரதியோகியாம்.

(௧) நாசத்தால் அந்தப்பிரதியோகியின் தோற்றமுண்டாகிறது.

(௨) பாதத்தில் பிரதியோகியின் தோற்ற முண்டாகிறதில்லை. ஆனால் மூன்றுகால அபாவம் (மூன்றுகாலத்திலு மில்லாமை) தோற்றுகிறது.

இது நாசத்திற்கும் பாதத்திற்கு முள்ள பேதம்.

* ௩. குலாலசக்கிரம், தண்டத்தைச் சுற்றுதலாகிய முயற்

இவ்வாறு இது பாதிதமாகிய பிரபஞ்சததோற்றத்தில் திருஷ்டாந்தமாம்.

உ௱ரு. வினா :—விதேகமுக்தி யென்பது யாது ?

விடை :—க. பிரபஞ்சப்பிரதீதி யில்லாமல் பிரஹ்மரூபமாக நிலைத்திருத்தல்,

உ. அல்லது பிராரப்தகர்மம் போகத்தினால் நசித்த பிறகு ஸ்தூலசூக்ஷ்மசரீராகாரமாகப் பரிணமித்தை யடைந்த அஞ்ஞானம் சேதனத்தில் ஒடுங்குதல் விதேக முக்தியாம்.

உ௱சா. வினா:—பிராரத்தம் முடிந்தகாலத்தில் காரியத்தோடு அஞ்ஞானலேசம் எந்தச் சாதனத்தால் விலயமாகின்றது ?

விடை :—பிராரப்தகர்மத்தின் முடிவில் அதிக அல்லது குறைந்த மூர்ச்சைக்காலத்தில் பிரஹ்மாகாரவிருத்தி சம்பவியாது ; வித்துவானுக்கு விதியு மில்லை. என்றாலும் சுழுத்தியைப்போல அந்த மூர்ச்சைக்காலத்திலும் பிரஹ்ம வித்தையின் சம்ஸ்கார மிருத்தலால், அதில் ஆரூடமாகிய சேதனத்தால் காரியத்தோடு அஞ்ஞானலேசம் விலய(நாச)

---

சியை விட்டபிறகும் வேகத்தின் வலியாற் சுற்றுதல்போல, பாத முண்டாகிய பிறகும் பிராரப்தகர்மத்தால் தேகாதிப்பிரபஞ்சம் தோற்றுதல் பாதிதாநுவிருத்தியாம்.

மாகின்றது. காஷ்டத்தி(கட்டையி)லுள்ள அக்கினியினால் துரும்பு முதலியவைகள் எரியத் தானும் எரிதல்போல, அந்தச் சம்ஸ்காரத்தில் ஆரூட(உள்ள) சேதனத்தால் பிரபஞ்சம் நாசமாகத் தானும் (ஞானத்தின் சம்ஸ்காரமும்) நாசமாகின்றது. பிறகு அசங்க சுத்த சச்சிதானந்த சொப்பிரகாச தானேதானாகிய பிரஹ்மம் மிஞ்சுகின்றது.

ஸ்ரீ விசாரசந்திரோதயம் பதினான்காங்கலை
ஜீவன்முக்திவிதேகமுக்திவர்ணனம் என்பது
முடிந்தது.

# ஸ்ரீவிசாரசந்திரோதயம்.

## பதினைந்தாங்கலை.

### * க. வேதாந்தப்பிரமேய(பதார்த்த)வர்ணநம்.

* ஞேயப் பொருளை நீயு முணர்ந்து
சகல சமுசய வநர்த்த மொழிப்பாய்
முத்தி யாததன் சாதன மியாதா
மதனைப் பெறுமிடைச் சாதன மியாது
விடயம் ஞானத்திற் கியாதென வுணர்க. (க)

ஈசன் றத்துவம் வேறெனக் கொண்டு
துவம்பதப் பொருளைச் செவ்வே யறிக

---

* க. வேதாந்தசாஸ்திரமாகிய பிரமாணத்தா லுண்டாகிய எதார்த்தஞானம் பிரமாவாம்.

௨. அந்தப்பிரமாவால் அறியத்தக்க பதார்த்தம் பிரமேயமாம். அவைகள் இங்கே கூறப்படுகின்றன. ஆகையால் இந்தப் பதினைந்தாங்கலையை விசாரித்தலால் பிரமேயத்திலுள்ள சமுசயம் நிவிருத்தியாகின்றது.

பிரமேயத்திலுள்ள சமுசயத்தை ஸ்ரீ பாலபோதம் என்னும் நூலின் ஒன்பதாவது உபதேசத்திற் காண்க.

* ஞேயம் = அறியப்படுவது.

தற்பதப் பொருளைத் தனியே நாடுக
பிரம மான்மா வொன்றெனக் கொள்ளே. (௨)
அங்குச் சத்தாதி யைசுவ ரியங்கொடு
சச்சிதா நந்தமா மதென் றுமுளதெனு
மிவ்வகை ஞானந் தன்னை யுணர்க. (௩)

உ௩௭. வினா:—மோக்ஷத்தின் சொரூபம் யாது?

விடை:—௧. காரியசகித அஞ்ஞானமாகிய அநர்த்த (பந்த)த்தின் நிவிருத்தியும்,

௨. பரமாநந்தமாகிய பிரஹ்மத்தின் பிராப்தியும் மோக்ஷத்தின் சொரூபமாம்.

உ௩௮. வினா:—அந்த மோக்ஷத்திற்குச் சாக்ஷாத் சாதனம் யாது?

விடை:—* ௨. பிரஹ்மாத்மவைக்கியத்தின் அபரோக்ஷஞானம், மோக்ஷத்திற்குச் சாக்ஷாத் சாதனமாம்.

---

* ௨. "ज्ञानादेवहि संसारविनाशो नैव कर्मणा ॥ ஞானத்தினாலேயே சம்சாரவிநாச முண்டாம்; கர்மத்தினா லன்று." என்னும் நுத்திஸிம்ஹதாபநிஷதம். "अतस्सर्वेषां कैवल्यमुक्तिर्ज्ञानमात्रेणोक्ता न कर्मसांख्ययोगोपासनादिभिः ॥ ஆதலால் எல்லோருக்கும் கைவல்யமுக்தி ஞானமாத்திரத்தினாற் சொல்லப்பட்டதாம். கர்மம், சாங்கியம், யோகம், உபாசனை முதலியவற்றா லன்று." என்னும் முக்திகோபநிஷதமுதலிய சுருதிகளும் இதிற் பிரமாணமாதல் காண்க.

உநகூ. வினு:—மோக்ஷத்திற்கு அவாந்திர(ஞான வாயிலாகச்) சாதனம் யாது?

விடை:—நிஷ்காமகர்மம், உபாசனைமுதலிய அநேகம் மோக்ஷத்திற்கு அவாந்திரசாதனமா யிருக்கின்றன.

உச0. வினு:—அந்த ஞானத்திற்கு விஷயம் யாது?

விடை:—ஆத்மப்பிரஹ்மவைக்கியம் ஞானத்திற்கு விஷயமாம்.

உசக. வினு:—ஆத்மாவின் சொரூபம் யாது?

விடை:—க. தேகேந்திரியப்பிராணமனோபுத்தியஞ் ஞானசூனியங்களுக்கு வேறாய் உ. அகர்த்தாவும், ந. அபோக்தாவும், ச. அசங்கமும், ரு. வியாபகமுமாகிய சா. சேதனம் ஆத்மாவின் சோரூபமாம்.

உசஉ. வினு:—பிரஹ்மத்தின் சொரூபம் யாது?

விடை:—க. நிஷ்பிரபஞ்சமும், உ. அசங்கமும், ந. பரிபூரணமுமாகிய ச. சேதனம் பிரஹ்மத்தின் சோரூபமாம்.

உசந. வினு:—பிரஹ்மாத்மவைக்கியம் எப்படிப்பட்டது?

விடை:—க. சச்சிதானந்தமாயும், உ. ஐசுவரிய சொரூபமாயும், ந. என்றுமுள்ளது பிரஹ்மாத்மவைக்கியமாம்.

உ௪௪. வினா :—ஞானத்தின் சொரூபம் யாது ?

விடை :—ஜீவப்பிரஹ்மங்களின் அபேதநிச்சயம் ஞானத்தின் சொரூபமாம்.

உ௪௫. வினா :—ஞானத்தின் சாக்ஷாத் அந்தரங்க (சமீபித்த)சாதனம் யாது ?

விடை :—பிரஹ்மநிஷ்டராகிய குருமுகமாக மகாவாக்கியார்த்தசிரவணம் செய்தல் ஞானத்தின் சாக்ஷாத் அந்தரங்க சாதனமாம்.

உ௪௬. வினா :—ஞானத்திற்குப் பரம்பரையாக அந்தரங்கசாதனம் யாது ?

விடை :—க. விவேகம், உ. வைராக்கியம், ௩. ஷட்சம்பத்தி (சமம் தமம் உபரதி திதிக்ஷை சிரத்தை சமாதானம்), ௪. முமுக்ஷுத்துவம், ௫. "தத்" பத "துவம்" பதார்த்தங்களின் சோதனை, ௬. சிரவணம், ௭. மனனம், ௮. நிதித்தியாசனம் என்னும் இவ்வெட்டும் ஞானத்திற்குப் பரம்பரையாக அந்தரங்கசாதனமாம்.

உ௪௭. வினா :—ஞானத்தின் பகிரங்க (தூரத்துள்ள) சாதனம் யாது ?

விடை :—நிஷ்காமகர்மம் நிஷ்காமவுபாசனைமுதலியன ஞானத்தின் பகிரங்கசாதனமாம்.

உசஅ. வினு:—ஞானத்திற்கு எல்லாம் சேர்த்து எத்தனை சாதனங்களாம்?

விடை:—ஞானத்திற்கு எல்லாம் சேர்த்து பதினொரு சாதனங்களாம்.

ஸ்ரீ விசாரசந்திரோதயம் பதினைந்தாங்கலை

வேதாந்தப்பிரமேயவர்ணனம் என்பது

முடிந்தது.

---

# ஸ்ரீவிசாரசந்திரோதயம்.

---

## பதினாறுங்கலை.

### வேதாதபதார்த்தசம்ஞாவர்ணநம்.

அல்லது

### இலகு (சிறிய) வேதாந்தகோசம்.

நிஷ்கள நிஜமெனப் புகலுமே வேதம்
பிரமத் தொருபதோ டாறுங் கலையிலை
நிரவய வத்தொடு நிஷ்களங் காமமெஃ
தென்று மேக ரசமா மதனுக்
கங்கத் தன்மை யணுவு மில்லை. (க)

இரணிய கருப்பஞ் சிரத்தை விண்ணே
யநில மநல நீர்பூ விந்திய
* மனமக மாற்றன் மந்திரந் தவமே
கரும மூலகம் பெயரெனு மிவைதாங்
கலைபதி னாறெனக் கண்டுணர் வாயே. (உ)

சடவுபா தியின்றன் றர்மமா மிவற்றுண்
மலர்நூல் போனாட் கலந்தா சிரயமா
நிஜசி தான்மா சத்தென வுணரே. (ங)

---

* மனம் = மனது. அகம் = அகம்.

## இருவகைப்பதார்த்தங்கள்.

அத்தியாத்மதாபம் ௨:—

ஆத்மாவை ஆசிரயித்திருக்கும் ஸ்தூலசூக்ஷ்மசரீரங்கள் அத்தியாத்மமாம். அதிலுள்ள தாபம் (துக்கம்) அத்தியாத்மதாபமாம்.

க. ஆதி :—மானஸதாபம்.

௨. வியாதி :—சரீரதாபம்.

அத்தியாசம் ௨:—

பிராந்திஞானத்தின் (திரிபுக்காட்சியின்) விஷயமும் பிராந்திஞானமும்.

க. அர்த்தாத்தியாசம் :— பிராந்திஞானத்தின் விஷயமாகிய சர்ப்பமுதலியன அல்லது தேகாதிப்பிரபஞ்சம்.

௨. ஞானாத்தியாசம் :— பிராந்திஞானம் (சர்ப்பமுதலியவற்றின் அல்லது தேகாதிப்பிரபஞ்சத்தின் ஞானம்).

க. சம்பந்தாத்தியாசம் :— கற்பிததாதாத்மியசம்பந்தத்தின் அத்தியாசம்.

௨. சொரூபாத்தியாசம் :—சம்பந்தியின் அத்தியாசம்.

அசம்பாவனை ௨:—அசம்பவத்தின் ஞானம்.

க. பிரமாணகதம்:—பிரமாண(வேத)த்திலுள்ள அசம்பவத்தின் ஞானம்.

உ. பிரமேயகதம்:—பிரமேயத்தி)பிரமாணத்தின் விஷயமாகிய மோக்ஷமுதலியவற்றி)லுள்ள அசம்பவத்தின் ஞானம்.

அகங்காரம் உ:—

க. சுத்தம் :—சுவசொரூபத்தின் அகங்காரம்.

உ. அசுத்தம்:--தேகமுதலிய அநாத்மாக்களின் அகங்காரம்.

க. சாமானியம் :— தேகாதிதர்மங்களி னுத்தேசமில்லாமல் கேவலம் "நான்" என்று எழும்புதல்.

உ. விசேஷம் :— தேகாதிதர்மங்களி(பெயர் ஜாதி முதலியவற்றி)ன் உத்தேசத்தால் "நான்" என்று எழும்புதல்.

க. * க. முக்கியம் :— தேகமுதலியவற்றோடுகூடிய சிதாபாசனையும் கூடஸ்தனை (சாட்சியை)யும் ஒன்றுபடுத்தி, அறியாமையால் சகல சங்காதத்திலும் அகம் ("நான்" என்னும்) சத்தத்தைச் சேர்த்துக்கொண்டு "நான்" என்று எழும்புதல், முக்கிய(சக்திவிருத்தியால் அறியத்தக்க

---

* க. இம்மூவகையகங்காரமும் இவ்வாறே மகோபநிஷதம் ரு-வது அத்தியாயத்திற் கூறப்பட்டுளது. விரிவஞ்சி இக்கலையில் மூலசுருதிகள் எழுதப்படாமல் இடமாத்திரம் குறிப்பிக்கப்பட்டுளது.

அகம்சப்தத்தின் அர்த்தத்தை விஷயஞ்செய்யும்) அகங்காரம்.

உ. அமுக்கியம் :—விவேகியினல் (க) வியவகாரகாலத்தில் தேகாதிகளோடுகூடிய சிதாபாசன்மாத்திரத்திலும், (உ) பரமார்த்ததசையில் கூடஸ்தன்மாத்திரத்திலும் ("நான்" என்னும்) சத்தத்தைச் சேர்த்துக்கொண்டு "நான்" என்று எழும்புதல், இரண்டுவிதமாகிய அமுக்கிய (இலக்ஷணவிருத்தியால் அறியத்தக்க அகம்சப்தத்தின் அர்த்தத்தை விஷயஞ்செய்யும்) அகங்காரம்.

அஞ்ஞானம் உ:—

க. சமஷ்டி :—வனத்தைப்போல அல்லது ஜாதியைப்போல அல்லது ஜலாசய(தடாக)த்தைப்போல ஒரு புத்திக்கு விஷயமாவது.

உ. வியஷ்டி:—விருக்ஷங்களைப்போல அல்லது வியக்திகளைப்போல அல்லது நீர்த்துளிகளைப்போல அநேக புத்திகளுக்கு விஷயமாவது.

க. மூலாஞ்ஞானம் :— சுத்தசேதனத்தை மறைக்கு மஞ்ஞானம்.

உ: தூலாஞ்ஞானம்:—குடமுதலியவற்றில் வரையட்ட சேதனத்தை மறைக்கு மஞ்ஞானம். இதுவே அவஸ்தாஞ்ஞானமாம்.

க. காரியாஞ்ஞானம்:— பிராந்திஞானமும் அதன் விஷயமும்.

உ. காரணாஞ்ஞானம்:— பிராந்திக்கு ஏதுவான அஞ்ஞானம்.

* உ. அஞ்ஞானத்தின் சக்தி:— அஞ்ஞானத்தின் சாமர்த்தியம்.

க. ஆவரணசக்தி:— அதிஷ்டானத்தை மறைக்கும் அஞ்ஞானத்திலுள்ள சாமர்த்தியம்:

உ. விக்ஷேபசக்தி:—பிரபஞ்சமும் அதனது ஞானமுமாகிய விக்ஷேபத்தை உண்டாக்கும் அஞ்ஞானத்திலுள்ள சாமர்த்தியம்.

ஆத்மா உ:—க. ஜீவாத்மா உ. பரமாத்மா.

ஆவரணம் உ:—க. அசத்துவாபாதகம். உ. அபாநுபாதகம்.

உ. இலக்ஷணம் உ:—

க. சொரூபலக்ஷணம்:— எப்போது மிருப்பதாகிய வியாவர்த்தக (வேறுபிரித்தறிவிக்கும்) லக்ஷணம்.

உ. தடஸ்தலக்ஷணம்:—ஏதேனும் ஓர் காலத்திருப்ப

* உ. சாஸ்வதிரஹஸ்யோபநிஷதம்.

தாகிய வியாவர்த்தகலக்ஷணம். உபலக்ஷணம் என்பதும் இது.

உபாசனை உ:—

க. சகுணம் :— காரணப்பிரஹ்ம(ஈசுவர)காரியப் பிரஹ்மங்(இரணியகருப்பமுதலியவை)களின் உபாசனை.

உ. நிர்க்குணம்:—சுத்தப்பிரஹ்மத்தி னுபாசனை.

கந்தம் உ:—

க. சுகந்தம் (நறுநாற்றம்). உ. துர்க்கந்தம் (தீநாற்றம்).

சத்தம் உ:—

க. வருண(அக்ஷர)வடிவம். உ. ஒலிவடிவம்.

சத்தசம்பந்தம் உ:—

க. சக்திவிருத்தி உ. இலக்ஷணாவிருத்தி.

* ங. சமாதி உ:—

க. சவிகற்பம். உ. நிருவிகற்பம்.

* ச. க. சம்பிரஞ்ஞாதசமாதி. உ. அசம்பிரஞ்ஞாதசமாதி.

சமுசயம் உ:—

க. பிரமாணகதம். உ. பிரமேயகதம்.

---

* ங. சரஸ்வதிரஹஸ்யோபநிஷதம்.
* ச. முக்திகோபநிஷதம்.

சம்பத்து உ:—

க. தெய்வசம்பத்து. உ. அசுரசம்பத்து.

சம்பந்தம் உ:—

க. சையோகம். உ. தாதாத்மியம்.

ஜாதி உ:— அநேகதர்மி(ஆசிரியங்)களிற் கலந்துள்ள ஒரு தர்மம்.

க. பரம்:—"குட மிருக்கிறது" "பட மிருக்கிறது" என்றிவ்வாறு எங்கும் கலந்துள்ள சத்தை எதுவோ, அதனை நியாயமதத்தில் பர(சிரேஷ்ட)ஜாதி என்பர்.

உ. அபரம்:—சத்தைக்கு வேறாகிய கடத்துவமுதலிய ஜாதியை நியாயமதத்தில் அபர(சிரேஷ்டமில்லாத) ஜாதி என்பர்.

க. வியாப்பியம்:—வியாபகஜாதிக்குள்ளடங்கிய(அற்பதேசத்திலுள்ள) ஜாதி வியாப்பியஜாதியாம். அது மனிதத்தன்மைஜாதிக்குள் ளடங்கிய (ஏகதேசத்திலுள்ள) பிராஹ்மணத்துவம், க்ஷத்திரியத்துவமுதலியஜாதிகள் வியாப்பியஜாதிகளாதல்போல.

உ. வியாபகம்:—வியாப்பியஜாதியினும் அதிகதேசத்திலுள்ள ஜாதி வியாபகஜாதியாம். அது பிராஹ்மணத்துவமுதலிய வியாப்பியஜாதியினும் அதிகதேசத்திலுள்ள மனுஷத்துவஜாதி வியாபகஜாதியாதல்போல. இந்த வியாப்பியம்

வியாபக மென்னும் இரண்டுபேதமும் அபாரத்துவஜாதிக் காம்.

சூக்ஷ்மசரீரம் ௨:—

௧. சமஷ்டி. ௨. வியஷ்டி.

தூலசரீரம் ௨:—

௧. சமஷ்டி. ௨. வியஷ்டி.

நிக்கிரகம் ௨:—

௧. கிரமம்:— இயமநியமாதி எட்டுயோகாங்கங்களால் கிரமமாயுண்டாகும் சித்தநிரோதம் கிரமநிக்கிரகமாம்.

௨. ஹடம்:—பிராணநிரோதமாகிய ஹடத்தால் அல்லது சாம்பவிமுதலிய முத்திரைகளுள் ஏதேனும் ஓர் முத்திரையினப்பியாசத்தால் உண்டாகும் சித்தநிரோதம் ஹடநிக்கிரகமாம்.

பரமஹம்ஸசந்நியாசம் ௨:—

௧. விவிதிஷை:— ஞானவிருப்பத்தால் ஞானத்தை அடையும்பொருட்டுச் செய்துகொள்ளப்பட்ட சந்நியாசம் விவிதிஷாசந்நியாசமாம்.

௨. வித்துவத்:—ஞானத்திற்குப் பிறகு வாசனாக்ஷய மனோநாசதத்துவஞானங்களின் அப்பியாசவாயிலாக ஜீவன்முக்தியிலக்ஷண ஆனந்தத்தின்பொருட்டுச் செய்துகொள்ளப்பட்ட சந்நியாசம் வித்துவத்சந்நியாசமாம்.

* பாதம் உ:—

க. விஷயவடிவபாதம். உ. விஷயிவடிவபாதம்.

பிரபஞ்சம் உ:—

க. பாகியம். உ. ஆந்தரம்.

பிரஞ்ஞை உ:—

க: ஸ்திதப்பிரஞ்ஞை. உ. அஸ்திதப்பிரஞ்ஞை.

* ச. பிரஹ்மம் உ:—

க. சப்தப்பிரஹ்மம், உ. பரப்பிரஹ்மம்.

பிராந்தி உ:—

க. சோபாதிகப்பிராந்தி. உ. நிருபாதிகப்பிராந்தி.

சிருஷ்டி உ:—

க. கிரமசிருஷ்டி (முறையே)யுண்டாவது. உ. யுகபத் சிருஷ்டி (ஒரேகாலத்தில்) உண்டாவது.

க. ஜீவசிருஷ்டி. உ. ஈசுவரசிருஷ்டி.

* ரு. மனதின் நாசம் உ:—

க. சொரூபநாசம். உ. அரூபநாசம்.

---

*இதனைப் பாலபோதம் அ-வது உபதேசத்திற் காண்க.

* ச. திரிபுராதாபிநீயுபநிஷத்தம்.

* ரு. முக்திகோபநிஷத்தம்.

* ௬. மனம் ௨:—

௧. சுத்தம்=காமமின்றியது. ௨ அசுத்தம்=காம சங்கற்பம்.

முக்தி ௨:—

௧. பதப்பிராப்திவடிவம். ௨. ஸ்வரூபப்பிராப்தி வடிவம்.

மோக்ஷாம்சம் ௨:—

௧. அநர்த்தநிவிருத்தி. ௨. பரமாநந்தப்பிராப்தி.

* ௭. யோகம் ௨:—

௧. சாலம்பம்=கைகால்முதலிய வடிவத்தோடுகூடிய மண்டலமுதலிய பற்றுக்கோடாகிய ஆலம்பனமுடையது.

௨. நிராலம்பம்=சகலகாமரூப கர்மங்களினின்று மிக விலகியதாகவும், சகலகாமமுதலிய அந்தக்கரணவிருத்திகளுக்கும் சாக்ஷித்தன்மையாகவும், அதன் ஆலம்பனமின்றியதாகவும் பாவித்தல்.

வாக்கியம் ௨:—

௧. அவாந்தரவாக்கியம். ௨. மகாவாக்கியம்.

* ௮. வாசனை ௨:—

---

* ௬. திரிபுராதாபிநீயுபநிஷதம்.

* ௭. மகாநாராயணோபநிஷதம்.

* ௮. முக்திகோபநிஷதம்.

க. சுபம். உ. அசுபம்.

* கூ. க. சுத்தம். உ. மலினம்.

வாதம் உ:—

க. பிரதிபிம்பவாதம். உ. அவச்சேதவாதம்.

* க0. வித்தை உ:—

க. பரம்=பிரஹ்மஞானம். உ. அபரம்=வேதவேதாங்கசாஸ்திராதிகளாம்.

விபரீதபாவனை உ:—

க. பிரமாணகதம். உ. பிரமேயகதம்.



## மூவகைப்பதார்த்தங்கள்.

அத்தியாத்மமுதலியன ௩:—

க. இந்திரியம் (அத்தியாத்மம்). உ. தேவதை (அதிதெய்வம்). ௩. விஷயம் (அதிபூதம்).

அந்தக்கரணதோஷம்:—௩.

க. மலம்:—ஜன்மஜன்மாந்திரங்களின் பாபம்.

உ. விக்ஷேபம்:—சித்தத்தின் சஞ்சலத்துவம்.

௩. ஆவரணம்:—சொரூபத்தின் அஞ்ஞானம்.

---

* கூ. முக்திகோபநிஷதம்.

* க0. ருத்திராஹிருதயோபநிஷதம்.

அர்த்தவாதம் ௩:—நிந்தையையாவது ஸ்துதியையாவது அறிவிக்கும் வாக்கியம்.

க. அநுவாதம் :—அந்நியப்பிரமாணத்தாற் சித்தித்த அர்த்தத்தை அறிவிக்கும் வாக்கியம்; "அக்கினி பனிக்கு மருந்து" என்னும் வாக்கியம்போல.

உ. குணவாதம் :— அந்நியப்பிரமாணவிருத்தமாகிய விதேய அர்த்தத்தைக் குணவாயிலாகத் துதிக்கும் வாக்கியம். பிரகாசமாகிய குணத்தின் சமத்தன்மையால் துதிக்கும் "யூபம் (எக்கியகம்பம்) ஆதித்தன்" என்னும் வாக்கியம்போல.

௩. பூதார்த்தவாதம் :— சுவார்த்தத்தில் பிரமாணமுள்ளதாய் இலக்ஷணையினாலே விதேய அர்த்தத்தின் சிலாக்கியத்தை அறிவிக்கும் வாக்கியம் "வஜ்ஜிரஹஸ்தன் புரந்தரன்" என்னும் வாக்கியம்போல.

அவதி ௩:—வரம்பு (எல்லை).

க. ஞானத்தினது உ. வைராக்கியத்தினது. ௩. உபராமத்தினது :— சித்தநிரோதமாகிய உபரதி (உபசாந்தி)யினது.

* கக. அவஸ்தை ௩:—மூன்று தேகவியாபாரங்களின் காலம்.

---

* கக. வராகோபநிஷத்து மூன்றாம் அத்தியாயம்.

௧. ஜாக்கிரம். ௨. சொப்பனம். ௩. சுழுத்தி.

ஆத்மா ௩:—

௧. ஞானாத்மா :—புத்தி.

௨. மகானாத்மா :—மகத்தத்துவம்.

௩. சாந்தாத்மா :—சுத்தப்பிரஹ்மம்.

ஆத்மாவின் பேதம் ௩:—

௧. மித்தியாத்மா :—ஸ்தூலசூக்ஷ்மசங்காதம்.

௨. கௌணாத்மா :—புத்திரன்.

௩. முக்கியாத்மா :—சாக்ஷி (கூடஸ்தர்).

ஆநந்தம் ௩:—

௧. பிரஹ்மாநந்தம் :— சமாதியில் உண்டாகிய அல்லது சுழுத்தியிலுள்ள பிம்பபூதமாகிய ஆநந்தம்.

௨. விஷயாநந்தம் :— ஜாக்கிரசொப்பனங்களில் விஷயப்பிராப்தியாகிய நிமித்தத்தால் ஏகாக்கிரமாகிய சித்தத்தினுண்டாகும் ஆத்மசொரூபமாகிய ஆநந்தத்தின் க்ஷணிகப் பிரதிபிம்பம். இதனையே இலேசாநந்தமென்றும், மாத்திராநந்தமென்றும் கூறுவர்.

௩. வாசனாநந்தம் :— சுழுத்தியினின் றெழுதல்முதலிய உத்தானதசையில் அநுபவிக்கப்படும் ஆநந்தம்.

இலக்ஷண

௧. அவ்வியாப்தி :— இலக்ஷியத்தின் ஏகதேசத்தில் இலக்ஷணமிருத்தல். அது பசு கபிலநிறமுடையதெனல்.

௨. அதிவியாப்தி :—இலக்ஷியத்தில் வியாபித்து, இலக்ஷியமல்லாததிலும் அந்த இலக்ஷணமிருத்தல். அது பசு கொம்புள்ளதெனல்.

௩. அசம்பவம் :— இலக்ஷியத்தில் இலக்ஷண மில்லாதிருத்தல். அது பசு பிளவுபட்ட குளம்புகளுடையதெனல்.

உத்தேசமுதலியன ௩ :—

௧. உத்தேசம் :— பெயரைக் கீர்த்தித்(சொல்லு)தல்.

௨. இலக்ஷணம்:—அசாதாரணதர்மம் (ஒன்றிலிருப்பதாகிய தர்மம்).

௩. பரீக்ஷை :—பரீக்ஷித்தல் (அதிவியாப்திமுதலிய தோஷங்களை விசாரித்தல்.)

உலகம் ௩ :—

௧. சொர்க்கம். ௨. மத்தியம், ௩. பாதாளம்.

ஏஷணை ௩ :—இச்சை அல்லது வாசனை.

புத்திரேஷணை. ௨. வித்தேஷணை. ௩. உலகேஷணை.

ணம்:—எல்லோரு மென்னைத் துதிக்கவேண்டும்; ஒருவரு மென்னை நிந்திக்கலாகா தென்னு மிச்சை, அல்லது பர லோக இச்சை.

ஏதுமுதலியன ௩ :—

௧. ஏது. ௨. சொரூபம். ௩. பலம்.

கரணம் ௩ :—கர்மத்தின் சாதனம்.

௧. மனம். ௨. வாக்கு ௩. காயம்.

கர்த்தவ்யமுதலியன ௩ :—

கர்த்தவ்யம் .—செய்யத்தக்க ஞானசாதனம்.

௨. ஞாதவ்யம்:—அறியத்தக்க ஞானத்தின் விஷயம் பிரமாத்மு ஐக்கியம்.)

௩. பிராப்தவ்யம் :—அடையத்தக்க ஞானத்தின் பய னாகிய மோக்ஷம்.

கர்மம் ௩ :—

௧. புண்ணியம். ௨. பாபம். ௩. மிசிரம் (கலப்பு)

* ௧௨. காமம் ௩

க. சஞ்சிதம் :—ஜன்மாந்தரங்களில் சேர்க்கப்பட்ட கர்மம்.

உ. ஆகாமியம் :—வர்த்தமான (இந்த) ஜன்மத்தில் செய்யப்படும் கர்மம்.

௩. பிராரத்தம் :—வர்த்தமான ஜன்மத்தின் ஆரம்பத்திற்கேதுவாகிய கர்மம்.

கர்மமுதலியன ௩ :—

க. கர்மம் :—வேதவிகிதகர்மம்.

உ. விகர்மம் :—வேதத்திற்கு விருத்தமாகிய கர்மம்.

௩. அகர்மம் :—இருவிதகர்மத்தையும் செய்யாதிருத்தல்.

காரணவாதம் ௩ :—

க. ஆரம்பம் :—பட்டன்முதலியவர்களால் செய்யப்பட்ட பழைய வீடு இடிந்துபோக, அதிலுள்ள செங்கல் முதலிய சாமக்கிரிகளால் மறுபடியும் புதுவீட்டை ஆரம்பித்தல்போல, காரியமாகிய பிருதிவிமுதலியவற்றின் நாசத்தன்மைக்குக் காரணமாகிய பரமாணுக்கள் கெடாதிருக்கின்றன. அவற்றால் மறுபடியும் வேறு பிருதிவிமுதலியவற்றின் ஆரம்பம் உண்டாகிறது. இப்படி நியாயமதத்

தில் ஆரம்பவாதம் ஒப்பப்பட்டிருக்கின்றது. இதில் காரியகாரணங்களுக்குப் பேத முண்டு.

உ. பரிணாமம் :—பாலின் பரிணாமம் (வேற்றுருவம்) தயிராதல்போலச் சாங்கியமதத்தில் பிரகிருதியின் பரிணாமம் ஜகத்தாம். உபாசகர்களது மதத்தில் பிரஹ்மத்தின் பரிணாமம், ஜகத்தும் ஜீவனுமாம். இப்படி அவர்கள் பரிணாமவாதம் ஒப்பியிருக்கின்றார்கள். இதில் காரியகாரணங்களுக்கு அபேத முண்டு.

௩. விவர்த்தம் :—நிர்விகாரமாகிய இரஜ்ஜுவில் இரஜ்ஜுவாகிய அதிஷ்டானத்திலும் விஷமசத்தையுடைய வேற்றுருவமாகிய சர்ப்ப முண்டாகின்றது. அது இரஜ்ஜுவின் விவர்த்த(கற்பிதகாரிய)மாம். அதுபோல நிர்விகாரப்பிரஹ்மத்தில் அதிஷ்டானப்பிரஹ்மத்திலும் விஷமசத்தையுடைய வேற்றுருவமாகிய ஜகத்துண்டாகின்றது. அது பிரஹ்மத்தின் விவர்த்த(கற்பிதகாரிய)மாம். இப்படி வேதாந்தசித்தாந்தத்தில் விவர்த்தவாதம் ஒப்பப்பட்டிருக்கின்றது.

இதிலும் காரியகாரணங்களுக்குப் பாதத்திலாகிய அபேத முண்டு.

காலம் ௩.—

க. இறப்பு. உ. எதிர்வு. ௩. நிகழ்வு.

குருமுதலியன ௩ :—

குருமுதலியன நேத்திரத்தின் தர்மமாம். இங்கே குருடாகிய நேத்திரத்தின் தர்மமானது செவிடு ஊமை முதலிய மற்ற இந்திரியங்களின் தர்மங்களையும் குறிப்பிப்பதாயிருக்கின்றது. மந்தத்தன்மையும் தெளிவும் சகல இந்திரியங்களுக்கும் சமமென்றறிக.

௧. குருடு :—நேத்திரத்தால் எவ்விதத்தாலும் தனது விஷயத்தைக் கிரகியாதிருத்தல்.

௨. மந்தத்தன்மை :—இந்திரியத்தால் தனது விஷயத்தைச் சொற்பமாகக் கிரகித்தல்.

௩. தெளிவு :—இந்திரியத்தால் தனது விஷயத்தைத் தெளிவாகக் கிரகித்தல்.

௧௪. பிரஹ்மத்தின் ரூபம் ௩ :—

௧. சகளம். ௨. சகளநிஷ்களம். ௩. நிஷ்களம்.

---

இராகம், மைதுனம், இருட்டு என்னும் இவை தாமஸனது குணங்களென்று பிரஹ்மவாதிகளால் சொல்லப்படும். மேலே சாத்துவிகமும், நடுவில் இராஜஸமும், கீழே தாமஸமும் என்க. நல்ல ஞானம் சாத்துவிகமும், தர்மஞானம் இராஜஸமும், அறியாமை தாமஸமுமாம் என்க" என்பது சாரீரகோபநிஷதம்.

சத்தை ௩ :—

க. பாரமார்த்திகம். உ. வியாவகாரிகம். ௩. பிராதிபாஸிகம்.

* சம்பந்தம் ௩ :—

க. சையோகம். உ. சமவாயம். ௩. தாதாத்மியம்.

சரீரம் ௩ :—

க. ஸ்தூலம். உ. சூக்ஷ்மம். ௩. காரணம்.

ஜாக்கிரம் ௩ :—

க. ஜாக்கிரஜாக்கிரம் :—வர்த்தமான ஜாக்கிரத்தில் உண்டாகும் சொரூபசாக்ஷாத்காரம்.

உ. ஜாக்கிரசொப்பனம் :—ஜாக்கிரத்தில் உண்டாகும் சென்ற அல்லது இனி வரும் விஷயங்களைச் சிந்தித்தலாகிய மனோராஜ்யம்.

௩. ஜாக்கிரசுழுத்தி :—ஜாக்கிரத்தில் பிராந்தியினுல் உண்டாகும் ஜடசொரூபமாகிய விருத்தி.

சிரவணமுதலியவற்றின் பலம் ௩ :—

க. பிரமாணசமுசயநாசம். உ. பிரமேயசமுசயநாசம். ௩. விபரீயநாசம்.

* இதன் விவரம் விருத்திப்பிரபாகரத்திற் காண்க.

ஜீவன் ௩ :—

க. பாரமார்த்திகன் :—சாக்ஷி (கூடஸ்த) சேதனம்.

உ. வியாவகாரிகன்:—சாபாஸ அந்தக்கரணரூபஜீவன்.

௩. பிராதிபாஸிகன் :— சாபாஸ அந்தக்கரணரூப வியாவகாரிகஜீவனிடத்திற் சொப்பனத்தில் அத்தியஸ்த மாகும் ஜீவன்.

* கரு. க. விசுவன் :— ஜாக்கிரத்தில் மூனறு தேகத்திற்கும் அபிமானியாகிய ஜீவன்.

உ. தைஜஸன் :—சொப்பனத்தில் ஸ்தூலதேகத்தி னபிமானத்தை விட்டுச், சூக்ஷ்மம் காரண மென்னும் இரண்டு தேகங்களின் அபிமானியாயுள்ள அதே ஜீவன்.

௩. பிராஞ்ஞன்:—சுழுத்தியில் ஸ்தூலசூக்ஷ்மதேகங் களின் அபிமானத்தை விட்டுக், காரணதேக மொன்றன் அபிமானியாயுள்ள அதே ஜீவன்.

சுழுத்தி ௩ :—

க. சுழுத்திஜாக்கிரம்:—சாத்விகவிருத்திபூர்வகமாகிய சுகசுழுத்தி.

உ. சுழுத்திசொப்பனம் :—இராஜஸவிருத்திபூர்வகமா கிய துக்கசுழுத்தி.

---

* கரு. வைபங்களும் வாரமும்.

௩. சுழுத்திசுழுத்தி:-தாமஸவிருத்திபூர்வகமாகிய காட (ஆழ்ந்த)சுழுத்தி.

சுழுத்திமுதலியன ௩ :—

௧. சுழுத்தி. ௨. மூர்ச்சை. ௩. சமாதி.

சொப்பனம் ௩ :—

௧. சொப்பனஜாக்கிரம் :—எதார்த்தமாகிய பொருளைச் சொப்பனத்திற் காணுதல்.

௨. சொப்பனசொப்பனம் :—சொப்பனத்தில் இரஜ்ஜுசர்ப்பமுதலிய பிரதீதிகளைக் காணுதல்.

௩. சொப்பனசுழுத்தி :—கண்ட சொப்பனத்தின் மறதி (நினைவின்மை).

ஞாதாமுதலியன ௩:—

௧. ஞாதா (காண்பான்). ௨. ஞானம் (காட்சி) ௩. ஞேயம் (காணப்படுபொருள்

ஞானப்பிரதிபந்தகம் ௩:—

௧. சம்சயம். ௨. அசம்பாவனை. ௩. விபரீதபாவனை.

ஞானமுதலியன ௩ :—

ஞானம். ௨. வைராக்கியம். ௩. உபரதி.

தாதாத்மியம் ௩ :—

க. பிரமஜதாதாத்மியம்:—அகங்காரத்திற்குச் சாக்ஷியினேடுள்ள தாதாத்மியம்.

உ. சகஜதாதாத்மியம்:— அகங்காரத்திற்குச் சிதாபாஸனேடுள்ள தாதாத்மியம்,

௩. கர்மஜதாதாத்மியம்:— அகங்காரத்திற்கு ஸ்தூலதேகத்தோடுள்ள தாதாத்மியம்.

*கச. தாபம் ௩:—துக்கம்.

க. அத்தியாத்மம் :—ஸ்தூலசூக்ஷ்மசரீரங்களி லுண்டாகும் ஆதிவியாதியாகிய துக்கம், அத்தியாத்மதாபமாம்.

உ. அதிதெய்வம் :—தெய்வத்தினாலுண்டாகும் சீதம் உஷ்ணம் பெருமழை மழையின்மை மின்னல் இடி பூகம்பமுதலிய துக்கம், அதிதெய்வதாபமாம்.

௩. அதிபூதம் :—தனது சரீரத்திற்கு வேறாகிய தேகத்திற்கு விஷயமாகும் பிராணி(திருடர் புலி சத்துருமுதலியவை)களால் உண்டாகும் துக்கம், அதிபூததாபமாம்.

ஜாதமுதலியன ௩ :—

---

*கச. முதல்வேறுபா[illegible]

௧. நாதம் :—ஓங்காரம் அல்லது சத்தகுணம் அல்லது பரைமுதலிய (௪) வாக்குகள்.

௨. விந்து :— ஓங்காரத்தின் அலக்ஷியார்த்தமாகிய துரியபதம்.

௩. கலை :—ஓங்காரத்தின் அகாராதி மாத்திரை; பரைவாக்காகிய அம்சம் (சத்தத்தின் அவயவம்).

நிவிருத்தி ௩ (தாதாத்மியத்தின்) :—

௧. பிரமஜத்தின் நிவிருத்தி :—ஞானத்தினால் பிராந்தி (அவிவேகம்) நாசமாக, பிரமஜதாதாத்மியத்தின் நிவிருத்தி யுண்டாகின்றது.

௨. சகஜத்தின் நிவிருத்தி :—சகஜதாதாத்மியத்திற்கு ஞானத்தால் பாதமும், ஞானியின் தேகம் விழுந்தபின் நாசமு முண்டாகின்றது.

௩. கர்மஜத்தின் நிவிருத்தி :—ஞானியின் கர்மஜதாதாத்மியம் பிராரத்தபோகம் முடிவாகவே நிவர்த்தியாகின்றது.

பாபகர்மம் ௩ :—

௧. உத்கிருஷ்டம். ௨. மத்திமம். ௩. சாமானியம்.

புண்ணியகர்மம் ௩ :—

௧. உத்கிருஷ்டம். ௨. மத்திமம். ௩. சாமானியம்.

பிரபஞ்சம் ௩:—

௧. ஸ்தூலம். ௨. சூக்ஷ்மம். ௩. காரணம்.

பிரஹ்மம் ௩:—

௧. விராட்டு. ௨. இரணியகருப்பன். ௩. ஈசுவரன்.

பிராணாயாமம் ௩:—

௧. பூரகம். ௨. கும்பகம் ௩. இரேசகம்.

பிராரத்தம் ௩:—

௧. இச்சை. ௨. அநிச்சை. ௩. பரேச்சை.

* ௧௭. மனோநாசாதி ௩:—

௧. மனோநாசம். ௨. வாசனாக்ஷயம். ௩. தத்துவஞானம்.

மிசிரகர்மம் ௩:—

௧. உத்கிருஷ்டம். ௨. மத்திமம். ௩. சாமானியம்.

மூர்த்தி ௩:—

௧. பிரஹ்மா. ௨. விஷ்ணு. ௩. சிவன்.

---

* ௧௭. அன்னபூர்ணோபநிஷதம், முக்திகோபநிஷதம்.

* ௧௮. வாசனை ௩:—

௧. தேகவாசனை. ௨. லோகவாசனை. ௩. சாஸ்திரவாசனை.

வாதமுதலியன ௩:—

௧. வாதம்:—குருசிஷ்யசம்வாதம்.

௨. ஜல்பம்:-யுக்திப்பிரமாணங்களில் வல்ல பண்டிதர்களின் பரமதத்தினைக் கண்டித்துத் தன்மதத்தைப் பூஷிக்கும் வாதம்.

௩. விதண்டை:—மூர்க்கர்களது பிரமாணயுக்தியில்லாத வாதம்; அல்லது தன்.பக்ஷத்தை ஸ்தாபித்துப் பரபக்ஷத்தைக் கண்டித்தல். அது ஸ்ரீஹர்ஷமிசிராசாரியர் கண்டனகிரந்தத்தில் செய்திருப்பது போன்றதாம்.

விதிவாக்கியம் ௩:—

௧. அபூர்வவிதி:— அபூர்வக்கிரியையை விதிக்கும் வாக்கியம்.

௨. நியமவிதி:—அடையப்பட்ட இரண்டு பக்ஷங்களில் ஒன்றை விதிக்கும் வாக்கியம்.

௩. பரிசங்கியாவிதி:—இரண்டு பக்ஷத்தில் ஒன்றன் நிஷேதத்தை விதிக்கும் வாக்கியம்.

---

* ௧௮. மூன்றுசேர்ப்பிக்ஷதம்.

